

# நெறி

தெருவில் கணவன் குரல் கேட்டு சீதா அவளையறியாமல் இன்னும் அதிகமாகச் சுருண்டு படுத்துக் கொண்டாள். அப்படிப் படுத்துக் கொண்டதில் அவளுடைய தொடைகள் இரண்டும் இன்னும் வலித்தன. ஆனால் மல்லாந்தும் படுத்துக்கொள்ள முடியாதபடி, பின் புறத்தில் ரணகாயமாகவே இருந்தது.

இது முதல் தடவை இல்லை. இதற்கு முன்னரும் அவள் கணவன் பலமுறை அவளை அடித்திருக்கிறான். ஒருமுறை தலை மயிரைப் பற்றி அவளை அப்படியே தூக்கி கீழே தள்ளி உதைத் திருக்கிறான். ஆனால் இதெல்லாம் அவர்கள் குடிசைப் பகுதியில் இருந்தபோது. எப்போதும் கைக்கெட்டும் தூரத்தில் டஜன் கணக்கில் மனிதர்கள் இருப்பார்கள். அவர்கள் ஒருவரையொருவர் அடித்துக் கொள்வது, புருஷன் பெண் சாதியை அடிப்பது, தகப்பன் மகனை அடிப்பது, தாய் மகளை அடிப்பது இதெல்லாம் உண்டு. எதுவும் அளவு மீறிப் போவதற்கு முன் வேறு யாராவது தடுத்துவிடுவார்கள். ஒருமுறை அவளுடைய கணவனுக்குத்தான் அவளை அடிக்க போய் அவனுடைய கை வாசல் படியில் பட்டு ஐந்தாறு நாட்களுக்குக் கட்டுக் கட்டிக் கொண்டிருந்தான். குடிசைப் பகுதியில் இருந்தபோது பல நாட்களுக்குச் சோற்றுக்கு இல்லாமல் போயிருக்கிறது. பிள்ளை பெறுவதற்கு அவள் ஆஸ்பத்திரியில் கிடந்தபோது அவளுடைய கணவன் ஒருவேளை காப்பிக்குக் கூட அவளிடம் காசு கொடுத்துவிட்டு போகாததால் அவள் ஆஸ்பத்திரிகாரர்கள் தரும் உணவுக்காக காத்திருந்து அவர்கள் அவளைப் பிச்சைக்காரி மாதிரி நடத்துவதைச் சகித்துக்கொள்ள வேண்டியிருந்தது. மூன்றே நாட்களில் வீட்டுக்கு போவென்று ஆஸ்பத்திரியிலிருந்து கழுத்தைப் பிடித்து தள்ளாத குறையாக வெளியேறச் செய்துவிட்டார்கள்.

அப்போதெல்லாம் இப்படி விபரீதமாக மனதில் எண்ணங் கள் தோன்றியதில்லை. ஆனால் இப்போது மின்சார விளக்கு,

கணக்கு வழக்கில்லாமல் தண்ணீர், எப்பேர்பட்ட புயலிலும் பாதுகாப்பு தரும் கூரை இவ்வளவும் இருக்கும் போதுதான் ஒரு செங்கல்லை எடுத்து குழந்தை தலை மீது போட்டுவிட்டு இன்னொரு செங்கல்லைக் கொண்டு தூங்கும் கணவனின் தலையைச் சிதறடிக்க வேண்டும் என்று தோன்றுகிறது.

இடிவிழுவது போல இடுப்பில் உதை விழுந்தது. சீதா தடாலென்று எழுந்தாள். அவள் கணவன் வந்த சப்தம் கேட்காமல் ஒரு கணம் தூங்கிப் போயிருக்க வேண்டும்.

“தேவடியாமுண்டே! பொழுது விடிஞ்சப்புறம் இங்கே நாலு பேர் கண்ணிலே படும்படியா மினுக்காதேன்னு எத்தினிவாட்டி சொல்லிருக்கேண்டி முண்டே...”

அவன் இன்னொரு முறை உதைக்க வருவதற்குள் அவள் சிமெண்ட் மூட்டை அடுக்கி வைத்திருந்த கொட்டகைக்கு ஓடிப் போய் ஒரு மூலையில் பதுங்கினாள். அங்கும் அவன் அவளைத் துரத்தி வந்தால் ஓடுவதற்கு வேறிடமே கிடையாது.

ஆனால் அவன் மொட்டையாக இருந்த அக்கட்டிடத்தின் இரண்டாவது மாடிக்கு சென்றுவிட்டான். முந்தைய நாள் கட்டப் பட்ட பகுதிகளுக்குத் தண்ணீர் விட்டு நனைத்து விடுவதற்கு எப்படியும் அவனுக்கு அரை மணி நேரமாவது ஆகும்.

சீதா கொட்டகைக்கு வெளியே வந்தாள். அவள் படுத்திருந்த இடத்திற்குச் சென்று அங்கு கிடந்த கந்தல் துணியைச் சுருட்டி எடுத்து வந்தாள். அந்த துணியின் ஒரு முனையில்தான் சிறிது சில்லறை முடிந்து வைத்திருந்தாள். அதை சிமெண்ட் மூட்டைகளுக்கடியில் ஒரு மூலையில் ஒளித்து வைத்தாள்.

முந்தின இரவு நடந்த ரகளையில் குழந்தை பாமா பதறிப் போய் விட்டிருந்தாள். பாமா கண்களில் அவ்வளவு பயம், திகில் எப்போதும் தென்பட்டதில்லை. சீதா அடிபடும்போது ‘அம்மா அம்மா’ என்று குழந்தை அலறிக் கொண்டிருந்தது அவளுடைய கணவன் காதுக்குக் கேட்கவில்லை. அவன் அவளை அடித்துப் போட்டுப் போய் வெகுநேரம்வரை பாமா கேவிக் கொண்டிருந்தாள். அம்மாவிடமும் சொல்லப் பயந்தவளாக மூலையில் பதுங்கிக் கிடந்தாள். அவளும் அப்படியே பட்டினியாகச் சுருண்டு படுத்துத் தூங்கிவிட்டாள்.

ஆறு மாதமாகத்தான் இந்தக் கட்டிடத்தில் வாழ்வு. ஒரு கட்டிடக் காண்ட்ராக்டர் அழைத்துதான் அவளுடைய கணவன் குடும்பத்தோடு அந்த இடத்தில் தங்கச் சென்றான். முதலில் ஒரு

கொட்டகையில் சிமெண்ட் மற்றும் கட்டிடம் கட்டும் சாமான்களுடன் அவர்களும் இருந்தார்கள். அந்தக் கட்டிடத்தை தரைப் பகுதி மட்டும் திறந்த கொட்டகை மாதிரி அமைத்து மாடிகளைச் சுவர் வைத்து கட்டி வந்தார்கள். இப்போது கட்டிடம் இரண்டாவது மாடி வரை வந்து விட்டது. எப்படியும் முழுக் கட்டிடம் முடிய இன்னும் நான்கு மாதங்களாவது ஆகும் என்றுதான் கொத்து வேலைக்கு வந்து கொண்டிருந்தவர்கள் சொல்லிக் கொண்டிருந்தார்கள். இன்னும் நான்கு மாதங்கள் இங்கு எப்படி காலம் தள்ளுவது?

அவளுடைய கணவன் சிறிதும் தயங்காமல் வெளியே போய் நின்றுவிட்டு வந்து விடுவான். பகலில் ஏன் சோறாக்கவில்லை என்று அவளைத் திட்டவும் வந்து விடுவான். பதினைந்து நாட்களுக்கு ஒரு முறைதான் ரேஷன் கடைக்குப் போக முடியும் என்றான பிறகு மாதத்தின் முதல் வாரம் ஆறு கிலோ புழுங்கலரிசி வாங்கி வந்தது பாதிக்கு மேல் மீந்து கிடந்தது. முந்தைய தினம் முழுக்கக் குழந்தை பன்னும், பொரியும், டீயுமே உண்டு, போதாதற்கு இரவில் தகப்பன் அம்மாவை மிகுந்த குரோதத்தோடு அடிப்பதை பார்த்து திக்பிரமை பிடித்து மயங்கிக் கிடக்கிறது.

அவள் கணவன் மாடியிலிருந்து கீழிறங்கி வந்து அவளை முறைத்துப் பார்த்தான்.

பல் துலக்கும் போது தண்ணீர் நிரம்பியிருந்த தொட்டியில் சீதா எட்டிப் பார்த்தபோது அவளுடைய முகம் பார்க்கச் சகிக்க முடியாததாக இருந்தது. தலையில் எண்ணெய், சீப்பு கண்டு எவ்வளவோ நாட்களானபடியால் தலை மயிர் அலங்கோலமான நிறமும் காட்சியும் கொண்டிருந்தது. ஒரு காது நிரந்தரமாகக் கோணிப் போய்விட்டது. முகத்தையும், பல்லையும் நாட் கணக்கில் சரியானபடி கவனிக்காதபடியால் இரண்டுமே அருவருப்புத் தோன்றும்படி இருந்தன. இப்படி இருந்தும் அவளை அவன் வாய் திறந்த போதெல்லாம் 'தேவடியாமுண்டே' என்றுதான் திட்டினான். தேவடியாளாவது அவ்வளவு எளிதா?

அவள் சிறுமியாயிருந்த போது அவளுடைய அப்பாவும், அம்மாவும் நிறையவே சண்டை போட்டிருக்கிறார்கள். பார்க்கப் போனால் சென்னையில் அவள் இதுவரை தங்கி வசித்த மூன்று இடங்களிலும் எல்லா கணவன் — மனைவிகளும் சண்டை போட்டார்கள். ஆண்—பெண் உடலுறவு சம்பந்தப்பட்ட வசவுகள் தாராளமாகவே வாரி இறைக்கப்படும். தேவடியாள் என்ற வசவும் வரும். ஆனால் மற்ற வசவுகள் போல அது அந்த ஆணின்

கோபத்தை குறிக்கச் சொல்லப்பட்டதே தவிர, கோபத்துக்கே அப்பெண் அப்படி இருப்பதுதான் காரணம் என்றில்லை. ஆனால் இங்கு அவன் அவளை வருபவன் போகிறவனுடன் எல்லாம் சரசமாடி வருவது போலத்தான் நினைக்கிறான். அவர்களுக்கு அமைந்த வாழ்க்கையில் இவனோடு இருப்பதற்கே சேர்ந்தாற் போலப் பத்து நிமிடங்களுக்கு வசதி கிடைக்காது. அவள் கணவன் அவளை பற்றி நினைத்துக் கொண்டிருப்பது போல அவளால் எப்படித்தான் சமாளிக்க முடியும்? அந்த மாதிரி இருக்க வேண்டும் என்று அவள் நினைத்தால்கூட அது சாத்தியமா?

சீதாவுக்கு பசி வயிற்றை முறுக்கியது. தூங்கிக் கொண்டிருந்த குழந்தை பாமாவைத் தூக்கிக் கொண்டு வெளியே தெருவுக்கு வந்தாள். ஒரு லாரியிலிருந்து மணலைக் கீழே தள்ளிக் கொண்டி ருந்தார்கள். அவள் கணவன் அதை மேற்பார்வை புரிந்து கொண்டி ருந்தான்.

கணவன் கண்ணில் படாமல் சீதா பதுங்கியபடி சென்று சாலையில் திரும்பி அங்கிருந்த ஒரு டீக்கடைக்குச் சென்றாள். அவளும் டீ வாங்கிக் குடித்துவிட்டுக் குழந்தைக்கும் சிறிது டீ குடிக்கக் கொடுத்தாள். குழந்தைக்குத் தெரியாதபடி ஒரு பன் வாங்கி புடவை தலைப்பில் சுருட்டி செருகிக் கொண்டு இன்னொரு பன் வாங்கி குழந்தையின் கையில் கொடுத்தாள்.

மணல் முழுவதையும் நடைபாதையோரமாக இறக்கிவிட்டு லாரி ஏகமாகப் புகைவிட்டுக் கொண்டு கிளம்பத் தொடங்கியது. இப்போது கணவன் கண்ணில் படாமல் உள்ளே நுழைந்து கொட்டகைக்குள் ஒளிய முடியாது. சீதா குழந்தையை தூக்கி வைத்துக் கொண்டு நடைபாதையில் ஒதுங்கி நின்றாள்.

ஆனால் லாரி தெருவை விட்டு சென்ற பிறகுதான் அங்கு அவள் கணவன் இல்லை என்று தெரிந்தது. சீதா விரைவாக உள்ளே சென்று கொட்டகைக்குள் அவள் தனியாக வாங்கி வந்த பன் பொட்டலத்தை ஒளித்து வைத்தாள். அன்றைய வேலைக் காகக் கொத்து வேலைக்காரர்கள் வரத் தொடங்கினர். சித்தாள் வேலைக்காக வரும் பெண்கள் ஒழுங்காகத் தலைமுடித்து சுத்தமாக உடை உடுத்துவர, ஆண்கள் பெரும்பாலும் வாராத தலையுடனும் கசங்கிய துணியுடனும்தான் வந்தனர். நாளெல்லாம் இப்பெண்கள் இந்த ஆண்களோடு சேர்ந்துதான் உழைக்க வேண்டும். அவர்கள் பேச்சு எப்படி எப்படியெல்லாமோ சென்று பலமுறை சிரித்து, சிலமுறை கூச்சப்படும் படியாகவும் இருக்கும். இந்தப் பெண்கள்

தங்கள் கணவன்மார்களைச் சந்தேகம் தோன்றாதபடி எப்படிச் சமாளிக்க முடிகிறது?

அவள் கணவன் இப்போது வந்துவிட்டான். சித்தாள் வேலைக்காக வந்திருந்த ஒருத்தி, "வெத்தலை போடறியா, சின்ன காண்ட்ராக்டரே?" என்று கேட்டாள். அவன் அவளருகில் போய்நிற்க இதர பெண்களும் அவர்களைச் சூழ்ந்து நின்றார்கள்.

சீதா அந்தக் கூட்டத்தை முறைத்துப் பார்த்த வண்ணம் உட்கார்ந்திருந்தாள். அவ்வளவு பெண்களும் ஒழுக்கமுள்ளவர் களாக அவளுடைய கணவனுக்குத் தோன்றும் போது, அவளை மட்டும் எப்படி நெறியற்றவளாக அவனால் நினைக்க முடிகிறது? ஒரு கணம் சோர்வு அவளை மூச்சடைக்க அழுத்தியது.

தெருவில் காண்ட்ராக்டரின் மோட்டார் சைக்கிள் சப்தம் கேட்டு அவளுடைய கணவன் தெருப்பக்கம் சென்றான். சீதா ஒரு தீர்மானத்துக்கு வந்தவளாகக் குழாயருகில் சென்று முகத்தை அழுத்தித் தேய்த்துக் கழுவிக் கொண்டாள். பிறகு உடைந்த சீப்பொன்றை எடுத்துக் கொண்டு தலைமயிரை நிதானமாகச் சிக்கெடுத்து வாரிக்கொள்ள ஆரம்பித்தாள்.

1985

